## 01. உனது ரப்பு யார்?

என்னுடைய இரட்சகன் அல்லாஹ். அவனே என்னைப் படைத்தான் பரிபாலிக்கிறான் மேலும் அனைத்துப் படைப்பினங்களையும் அவனது அருளால் படைத்து பரிபாலிக்கின்றான்.

"உலகத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்" (1:2)

## 02. உனது மார்க்கம் எது?

என்னுடைய மார்க்கம் இஸ்லாம், இஸ்லாம் என்பது அல்லாஹ் ஒருவனுக்கே முழுமையாக அடிபணிதல், அவனுக்கு வழிபடுதல், அவனுக்கு இணைவைப்பதை விட்டும் இணை வைப்பவர்களை விட்டும் நீங்குவதாகும்.

"நிச்சயமாக அல்லாஹ்விடத்தில் (அங்கீகரிக்கப்பட்ட) மார்க்கம் இஸ்லாமாகும்..." (03:19)

## 03. உனது நபி யார்?

முஹம்மத் (ஸல்) அவர்களாகும்.

"முஹம்மத் அல்லாஹ்வின் தூதராவார்." (48:29)

## 04. கலிமதுத் தவ்ஹீதையும் அதன் கருத்தையும் குறிப்பிடுக.?

கலிமதுத் தௌஹீத், 'லாயிலாஹ இல்லல்லாஹ்'
அதன் கருத்து: உண்மையாக வணங்கப்படுவதற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவறும் இல்லை.

"நிச்சயமாக வணங்கப்படுவதற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் இல்லை (என்பதை) அறிந்துகொள்." (47:19)

"அல்லாஹ்வைத் தவிர வணங்கப்படுவதற்கு தகுதியானவன் வேறுயாருமில்லை என்று யார் சொல்லி அவன் அல்லாது

வணங்கப்படுபவற்றை நிராகரித்தானோ அவனது பொருளும் உயிரும் (மற்றவர்களுக்கு) தடைசெய்யப்பட்டதாகும்.'' (முஸ்லிம்)

## 05. அல்லாஹ் எங்கு உள்ளான்?

அல்லாஹ் வானத்தில் அர்ஷின் மேலே அனைத்துப் படைப்பினங்களுக்கும் மேலால் உள்ளான்.

'அர்ரஹ்மான் அர்ஷின் மீதானான்' (20:05)
'அவனே அடக்கியாள்பவன் அவன் அவனது படைப்பினங்களுக்கு மேலால் உள்ளான், மேலும் அவன் மிகவும் ஞானமிக்கவனாகவும், அறிவுள்ளளவனாகவும் இருக்கின்றான்.'' (06:18)

"எனது கோபத்தை எனது அருள் முந்திவிட்டது என்றொரு ஏட்டை அல்லாஹ் எழுதினான் அது அர்ஷுக்கு மேலே அவனிடத்தில் உள்ளது.'' (புஹாரி)

## 06. தவ்ஹீதுல் உலூஹிய்யா என்றால் என்ன?

அச்சம், நேர்ச்சை, பிரார்த்தனை, பாதுகாப்புத் தேடுதல், அருத்துப் பலியிடல் போன்ற வணக்கங்களின் மூலம் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துதல்.

"வணங்கப்படுவதற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத்தவிர வேறு எவருமில்லை என்பதைத் தெரிந்துகொள்'' (முஹம்மத் 19)

''வணங்கப்படுவதற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத்தவிர வேறுயாருமில்லை எனும் கலிமாவின் பாலே நீ முதலாவதாக அழைப்பு விடுக்கவேண்டும்'' (புஹாரி, முஸ்லிம்)

## 07.அல்லாஹ்வின் பன்புகள் விடயத்தில் தவ்ஹீத் என்றால் என்ன?

அல்லாஹ் தன்னைப் பற்றியும் அவனது தூதர் அவனைப் பற்றியும் எதைக்கொண்டு வர்னித்தார்களோ அதை நிலைநிறுத்துவதாகும்

(ஏற்றுக்கொள்வதாகும்), அது மிகவும் அழகிய, உயந்த பன்புகளாகும் அவனுக்கு இருப்பதைப் போன்ற பன்புகள் வேறு எவருக்கும் இல்லை. கேட்டல், பார்த்தல் போன்ற பன்புகள் அடுத்தவர்களுக்கு இருந்தாலும் அதை அல்லாஹ்வுடைய பன்புகளோடு ஒப்பிட முடியாது அவை வெறும் பெயரளவுள்ள தொடர்பு மாத்திரமே என்று நம்புவதாகும்.

எனவே, அல்லாஹ்வின் பண்புகளை மறுக்காமலும் திருபுபடுத்தாமலும், முறைமை கற்பிக்காமலும், உதாரணம் கூறாமலும், ஏற்றுக்கொள்ளல் வேண்டும்.

“அல்லாஹ்வைப்போல் எதுவுமில்லை அவன் பார்ப்பவனாகவும் கேட்ப்பவனாகவும் இருக்கிறான்.” (42:11)

“எங்களது இரட்ச்சகன் ஒவ்வொரு இரவிலும் அடிவானத்திற்கு இறங்குகிறான்.” (முஸ்லிம்)

## 08. ஒரு முஸ்லிம் தௌஹீதை ஏற்றுக்கொள்வதனால் என்ன பயன் ஏற்படும்?

உலகத்தில் நேர் வழியைப்பெருவான், மறுமையில் பாதுகாக்கப்படுவான்.

“ஈமான் தங்களது இறை நம்பிக்கையை (இணைவைப்பு எனும்) அநியாயத்தினால் கலக்காதவர்கள் எத்தகையவர்கள் என்றால். அவர்களுக்கு பாதுகாப்பு உள்ளது மேலும் அவர்களே நேர்வழி பெற்றவர்கள்.” (06:82)

“அடியார்கள் விடயத்தில் அல்லாஹ்விற்கு உள்ள கடமை அவனுக்கு இணைவைக்காதவர்களை தண்டிக்காமல் இருப்பதாகும்.” (புஹாரி, முஸ்லிம்)

## 09. தௌஹீதின் வகைகளைக் குறிப்பிடுக?

1. அத்தௌஹீத் அர்ருபூபிய்யா: நிச்சயமாக அல்லாஹ்தான் படைத்தான் அவனே உணவளிப்பவன், அவனே ஆட்சியாளன்

அவனே நிருவகிப்பவன் அவனுக்கு எந்த இணையும் இல்லை என்று நம்புவதாகும்.

2. அத்தௌஹீத் அல்உலூஹிய்யா: வணக்கங்களில் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துதல், அல்லாஹ்வைத் தவிர வேறு எவரையும் வணங்காதிருத்தல்.

3. தௌஹீதுல் அஸ்மாயி வஸ்ஸிபாத்: அல்குர்ஆனிலும் அஸ்ஸுன்னாவிலும் வந்திருக்கின்ற அல்லாஹ்வின் பெயர்கள் பண்புகளை நம்புதல், அதற்கு உதாரணம் சொல்லக்கூடாது, அதனை மற்றொன்றுடன் ஒப்பிடக்கூடாது, அதனை நிராகரிக்கக்கூடாது.

தௌஹீதின் மூன்று வகைகளுக்குமான ஆதாரம்: “(அவனே) வானங்கள், பூமி அவை இரண்டுக்கும் இடைப்பட்டவற்றின் இரட்சகனாவான் அவனை வணங்குவதற்காக பொறுமை காப்பாயாக, அவனுக்கு நிகராக எவரும் இருப்பதை நீ அறிவாயா?” (19:65)

**10. அல்லாஹ்வின் சில பெயர்களையும் பண்புகளையும் குறிப்பிடுக?**

அல்லாஹ், ரப்பு, அர்ரஹ்மான், அஸ்ஸமீ‘., அல்அலீம், அர்ரஸ்ஸாக், அல்ஹய்யு, அல்அழீம், அல்பஸர், அல்கலாம், அத்தத்பீர்...

அல்லாஹ்: உண்மையாக வணங்கப்படும் ஒவே கடவுள், அவன் ஒருவன், அவனுக்கு எந்த இணையும் இல்லை.

ரப்பு: படைத்தவன், ஆட்சி செய்பவன், உணவளிப்பவன், பரிபாலிப்பவன் அவன் மாத்திரமே.

அஸ்ஸமீ‘. : அவன் ஒவ்வொன்றையும் கேட்பவன், சப்தங்கள் வேறுபட்டாலும் அவை ஒவ்வொன்றையும் அவன் கேட்கின்றான், அவனது கேள்விக்கு எந்த தடையும் இல்லை.

அல்பஸீர்: அவன் ஒவ்வொன்றையும் பார்ப்பவன், சிறிய, பெரிய விடயங்கள் அனைத்தையும் பார்ப்பவன்.

அல்அலீம்: சென்ற காலம், நிகழ் காலம், எதிர் காலம் அனைத்திலு முள்ள ஒவ்வொரு விடயங்களையும் அறிந்தவன் அல்லாஹ்.

அர்ரஹ்மான்: அளவற்ற அருளாளன், படைப்பினங்கள் ஒவ்வொன்றையும் அவனது அருள் சூழ்ந்துள்ளது. ஒவ்வொரு அடியானும், ஒவ்வொரு படைப்பினமும் அவனது அருளின் கீழே இருக்கின்றது.

அர்ரஸ்ஸாக்: மனிதர்கள், ஜின்கள் அனைத்து கால் நடைகள், படைப்பினங்கள் அனைத்திற்கும் உணவளிப்பவன்.

அல்ஹய்யு: உயிரானவன் மரணிக்கமாட்டான், படைப்பினங்கள் அனைத்தும் மரணிக்கக்கூடியவர்கள்.

அல்அழீம்: முழுமையான கண்ணியம் உடையவன், அவனுடைய பெயர்கள், பன்புகள், அவனது செயல்கள் அனைத்திலும் முழுமையான கன்னியம் அவனுக்கே உரியது.

அல்பஸர்: பார்வை எனும் பன்பு அவனுக்கு உள்ளது. அவனது பார்வைக்கு தடைகள் வரையறைகள் எதுவும் இல்லை, எவும் அவனது பார்வையை விட்டும் மறைந்துவிடாது. அனுவை விடவும் சிறியதும் மிகப் பெரியவையும் அவனது பார்வைக்கு கீழ்தான் உள்ளது.

அல்-கலாம்: பேச்சு, அல்லாஹ் தான் விரும்பும் நேரத்தில் பேசும் வல்லமை கொண்டவன் அவனது பேச்சுக்கு நிகரான ஒப்பான ஒரு பேச்சு இல்லை, மிகவும் உயர்வான பேச்சின் சொந்தக்காரன் அவனே, அல்-குர்ஆன் அவனது பேச்சாகும்.

அத்தத்பீர்: இயக்குதல், அனைத்தையும் படைத்த அல்லாஹ் அவற்றை ஒப்புவமை அற்ற அடிப்படையில் மிகவும் துள்ளியமாக நிர்வகிக்கின்றான்.

## 11. அல்லாஹ் எதற்காக நம்மைப் படைத்தான்?

அல்லாஹ்வை மாத்திரம் அவனுக்கு எந்த இணையும் வைக்காமல் வணங்குவதற்கே எம்மைப்படைத்தான், வீணுக்காக விளையாட்டுக்காக படைக்கவில்லை.

''என்னை வணங்குவதற்காகவே அன்றி மனிதர்களையும் ஜின்களையும் நான் படைக்கவில்லை.'' (51:56)

''அல்லாஹ் விடயத்தில் அடியார்களின் கடமை: எவரையும் அவனுக்கு இணையாக்காது அவனை மாத்திரம் வணங்குவதாகும்'' (புஹாரி, முஸ்லிம்)

## 12. இபாதத் என்றால் என்ன?

வெளிப்படையான, உள்ளார்ந்த அடிப்படையிலான சொற்கள் செயல்களில் அல்லாஹ் எவற்றையெல்லாம் பொருந்திக்கொள்வானோ விரும்புவானோ அவை ஒவ்வொன்றையும் குறிக்கும் ஒரு பெயரே இபாதத் ஆகும்.

வெளிப்படையான எனும்போது: ஸுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ், அல்லாஹு அக்பர் என்று நாவினால் அல்லாஹ்வை திக்ரு செய்தல், தொழுதல், ஹஜ் செய்தல் போன்றவை.

உள்ளார்ந்த எனும்போது: அல்லாஹ்வின் மீது தவக்குல் வைத்தல், அவனை அஞ்சுதல், அவனிடம் ஆதரவு வைத்தல் போன்றவை.

## 13. அல்லாஹ்வை நாம் எப்படி வணங்குவது.?

அல்லாஹ்வுக்காக மாத்திரம் என்ற இஹ்லாசோடு, அல்லாஹ்வும் அவனது தூதரும் காட்டித்தந்த அடிப்படையில் வணங்க வேண்டும்.

''அல்லாஹ்வுக்காக மாத்திரம் தங்களது வணக்கங்களை உரித்தாக்கிய நிலையில் அவனை மாத்திரம் வணங்குமாறே அவர்கள் ஏவப்பட்டிருக்கிறார்கள்.'' (98:05)

“எங்களது ஏவல்களில் இல்லாத ஒரு செயலை யார் செய்கிறானோ அது நிராகரிக்கப்பட்டதாகும்.” (முஸ்லிம்)

## 14. அல்லாஹ்வை பயந்த நிலையிலும் அவனிடம் ஆதரவு வைத்த நிலையிலும் அவனை நாம் வணங்க வேண்டுமா?

ஆம் அல்லாஹ்வையும் அவனது தண்டனைகளையும் பயந்த நிலையிலும் அவனிடமுள்ள பாவமன்னிப்பு, நற்கூலி என்பவற்றை ஆதரவு வைத்த நிலையிலும் அவனை நாம் வணங்க வேண்டும்.

“அல்லாஹ்வைப் பயந்த நிலையிலும் அவனிடம் ஆசை வைத்த நிலையிலும் அவனை வணங்குவீராக.” (07:56) அதாவது அல்லாஹ்வின் நரகத்தைப் பயந்தும் அவனது சுவர்க்கத்தின் மீது ஆசை வைத்தும் அவனை நாம் வணங்க வேண்டும்.

“அல்லாஹ்விடம் நான் சுவனத்தைக் கேட்க்கிறேன் மேலும் அவனைக்கொண்டு நரகத்திலிருந்து பாதுகாவல் தேடுகிறேன்.” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அபூதாவுத்)

## 15. வணக்கத்தில் இஹ்ஸான் என்றால் என்ன?

நான் அல்லாஹ்வைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன் அல்லது நான் பார்க்காவிட்டாலும் அல்லாஹ் என்னைப் பார்த்துக்கொண்டிருக்கிறான் என்ற உறுதியான நம்பிக்கையுடன் அவனை வணங்குவதாகும். (முராகபா)

“நிச்சயமாக அல்லாஹ் உங்களைக் கண்கானிப்பவனாக இருக்கின்றான்.”(04:01)

“அவன் எத்தகையவனென்றால் நீ எழுந்து வனங்கும்போது அவன் உன்னைப்பார்க்கிறான்.” (26:218)

“அல்லாஹ்வை நீ பார்த்துக்கொண்டிருப்பதைப்போல வணங்குவதாகும். நீ அவனைப் பார்க்காவிட்டாலும் நிச்சயமாக அவன் உன்னைப் பார்த்துக்கொண்டிருக்கிறான்.” (முஸ்லிம்)

### 16. எம்மீதுள்ள மிகப்பெரிய கடமை என்ன?

எங்கள் மீதுள்ள மிகப் பெரிய கடமை: அல்லாஹ்வை எல்லா வழிகளிலும் ஒருமைப்படுத்துவதாகும்.

### 17. பிரார்த்தனை அல்லாஹ்விற்கு செலுத்தும் வணக்கமா?

ஆம் பிரார்த்தனை அல்லாஹ்விற்கு செலுத்தப்பட வேண்டிய உயர்ந்த வணக்கங்களில் ஒன்று.

“உங்களது இரட்ச்சகன் சொல்கிறான்: என்னை அழையுங்கள் நான் பதிலளிக்கின்றேன்.” (40:60)

“பிரார்த்தனையே வணக்கம்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (திர்மிதி)

### 18. மரணித்தவர்கள் பிரார்த்தனைகளை செவியேற்கிறார்களா?

மரணித்தவர்கள் பிரார்த்தனையை செவியேற்கமாட்டார்கள்.

“நிச்சயமாக நீ மரணித்தவர்களை செவியேற்கச்செய்யமாட்டாய்.” (27:80)

“நபியே! நீர் கப்ரில் உள்ளவர்களை செவியேற்கச்செய்பவனல்ல.” (35:22)

“நிச்சயமாக அல்லாஹ்விற்கு பூமியிலே சுற்றித்திரிகின்ற வானவர்கள் இருக்கிறார்கள் அவர்கள் எனது சமுதாயத்தின் சலாத்தை எனக்கு எற்றிவைக்கிறார்கள்.” (புஹாரி, முஸ்லிம்)

### 19. மறைவானவர்களிடம் அல்லது மரணித்தவர்களிடம் பாதுகாவல் தேடலாமா?

நாங்கள் அவர்களிடம் பாதுகாவல் தேடக்கூடாது மாறாக அல்லாஹ்விடமே பாதுகாவல் தேடவேண்டும்.

“நீங்கள் உங்கள் இரட்ச்சகனிடம் பாதுகாவல் தேடியபோது உங்களுக்கு அவன் விடையளித்தான்.’’ (08:09)

“நபியவர்களுக்கு ஒரு கவலையோ அல்லது துக்கமோ பிடித்தால், நிலையானவனே என்றும் உயிருடன் இருப்பவனே உனது அருளைக்கொண்டு பாதுகாவல் தேடுகிறேன் என்று சொல்லக் கூடியவர்களாக இருந்தார்கள்.’’ (திர்மிதி)

## 20. அல்லாஹ் அல்லாதவரிடம் உதவி தேட முடியுமா?

அல்லாஹ்விடமே அன்றி வேறு எவரிடமும் உதவி தேட முடியாது.

“உன்னையே வணங்குகிறோம் உன்னிடமே உதவியும் தேடுகிறோம்.” (01:05)

“நீ கேட்டால் அல்லாஹ்விடம் கேள் நீ உதவி தேடினால் அல்லாஹ்விடம் உதவி தேடு.’’ (திர்மிதி)

## 21. எங்களுடன் இருக்கின்ற உயிருடன் வாழ்கின்றவர்களிடம் உதவிகோர முடியுமா?

ஆம். அவர்களுக்கு எதில் சக்தி இருக்கிறதோ அந்த விடயங்களில் உதவி தேட முடியும்.

“நன்மைக்கும் இறைவனை அஞ்சுவதற்கும் ஒருவருக்கொருவர் உதவி செய்யுங்கள், தீமைக்கும் மற்றவருக்கு அநியாயம் செய்வதற்கும் நீங்கள் உதவியாக இருக்காதீர்கள்.’’ (05:02)

“ஒருவர் தன் சகோதரனுக்கு உதவி செய்யும் காலமெல்லாம் அவருக்கு உதவி செய்வதில் அல்லாஹ் இருக்கிறான்.” (முஸ்லிம்)

## 22. அல்லாஹ் அல்லாதவருக்கு நேர்ச்சை செய்ய முடியுமா?

அல்லாஹ்விற்கே அன்றி வேறு எவருக்காகவும் நேர்ச்சை செய்ய முடியாது.

“எனது இரட்ச்சகனே! எனது வயிற்றில் உள்ளதை உனக்கு நேர்ச்சை செய்கிறேன் அதை என்னிடமிருந்து ஏற்றுக்கொள்வாயாக.” (03:35)

“யார் அல்லாஹ்வுக்கு கட்டுப்படுவதில் நேர்ச்சை செய்தானோ அவன் அதை நிறைவேற்றற்றும், யார் அல்லாஹ்வுக்கு மாறுசெய்வதில் நேர்ச்சை செய்தானோ அவன் அதை நிறைவேற்றாமல் இருக்கட்டும்.’’ (புஹாரி)

## 23. அல்லாஹ் அல்லாவருக்காக அறுத்துப்பலியிட முடியுமா?

முடியாது. ஏனெனில் அது பெரிய இணைவைப்பாகும்.

‘‘உனது இரட்ச்சகனுக்ககாவே தொழுது அவனுக்காகவே அறுத்துப்பலியிடுவீராக.’’ (108:02)

“அல்லாஹ் அல்லாதவருக்காக அறுத்துப்பலியிடுபவரை அல்லாஹ் சபிக்கிறான்.’’ (முஸ்லிம்)

## 24. கப்ரை தவாப் செய்ய முடியுமா?

க.ஃ.பாவை மாத்திரமே தவாப் செய்ய முடியும். வேறு எதனையும் தவாப் செய்ய முடியாது.

“உரிமையிடப்பட்ட இல்லத்தை (க.ஃ.பாவை) அவர்கள் தவாப் செய்யட்டும்.’’ (22:29)

‘‘யார் க.ஃ.பாவை ஏழு தடவைகள் தவாப் செய்து இரண்டு ரக்அத்துக்கள் தொழுதானோ அவன் ஓர் அடிமையை உரிமையிட்டவன் போன்றாவான்.’’ (இப்னு மாஜா)

## 25. கப்றை நோக்கி தொழ முடியுமா?

கப்றை நோக்கித் தொழ முடியாது.

“க.்.பாவின் பாலே உனது முகத்தைத் திருப்புவாயாக.” (02:144)

“நீங்கள் கப்ரின் மீது இருக்காதீர்கள் மேலும் அதை நோக்கித் தொழாதீர்கள்.” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

## 26. எதைக்கொண்டு நாம் அல்லாஹ்விடம் உதவிதேடுவது?

அல்லாஹ்வின் பெயர்கள் பன்புகள் என்பவற்றைக்கொண்டும் நாம் செய்த நல்லமல்களைக்கொண்டும் உதவிகோருவோம்.

‘‘அல்லாஹ்வுக்கு அழகிய பெயர்கள் இருக்கின்றன அவற்றைக்கொண்டே அவனை அழைப்பீர்களாக.’’ (07:180)

“இறைவா! உனக்கு நீ வைத்துக்கொண்ட ஒவ்வொரு பெயரைக் கொண்டும் உன்னிடம் கேட்க்கின்றேன்.” (அஹ்மத்)

## 27. இறைவனிடம் பிரார்த்திப்பதற்கு படைப்பினங்களின் உதவி தேவையா?

இறைவனிடம் பிரார்த்திப்பதற்கு படைப்பினங்களின் உதவி தேவையில்லை.

“உன்னிடத்தில் எனது அடியான் என்னைப்பற்றிக் கேட்டால், நிச்சயமாக நான் அவனுக்கு நெருக்கமாக இருக்கின்றேன், அழைப்பவன் என்னை அழைத்தால் அவனுக்கு நான் விடையளிப்பேன். (என்று கூறுவீராக)” (02:186)

“நிச்சயமாக கேட்க்கின்ற நெருக்கமாக இருக்கின்ற உங்களுடன் இருப்பவனை நீங்கள் அழைக்கின்றீர்கள்.” (புஹாரி, முஸ்லிம்)

## 28. தக்வா என்றால் என்ன? அல்லாஹ்விடம் ஆதரவு வைத்தல் என்றால் என்ன? அதற்குரிய ஆதாரம் என்ன?

தக்வா: அல்லாஹ்வும் அவனது தூதரும் எவற்றை ஏவினார்களோ அவற்றை முடியுமான அளவு எடுத்து நடப்பதும் எவற்றைத் தடை செய்தார்களோ அவற்றைத் முற்றாக தவிர்ந்து வாழ்வதுமாகும்.

ஆதரவு வைத்தல்: அல்லாஹ்வின் நற்கூலியையும், அவனது பாவ மன்னிப்பையும் அவனது அருளையும் ஆதரவு வைத்தல்.

“(அல்லாஹ்வையன்றி) இவர்கள் யாரை பிரார்த்திக்கின்றார்களோ அவர்கள், ஏன் அவர்களில் மிகவும் (இறைவனுக்கு) நெருக்கமானவர்கள் கூட தங்கள் இறைவன்பால் (கொண்டு செல்ல) நற்கருமங்களை செய்து கொண்டும் அவனது அருளை எதிர்பார்த்தும் அவனது தண்டனைக்கு அஞ்சியுமே இருக்கின்றனர். நிச்சயமாக உமது இறைவனின் தண்டனை அச்சப்படத் தக்கதாகவே உள்ளது.” (17:57)

“நிச்சயமாக நானே அதிகம் மன்னிப்பவன் மிகவும் அருள் செய்பவன் என்றும், நிச்சயமாக என்னுடைய தண்டனையே மிகவும் நோவினை தரும் தண்டனை என்று எனது அடியார்களுக்கு அறிவிப்பாயாக.” (15:49,50)

## 29. ஈமான் என்றால் சொல்லும் செயலுமா? ஈமான் கூடவும் குறையவும் முடியுமா?

ஈமான் என்பது சொல், செயல், நம்பிக்கையாகும்.

அல்லாஹ்வுக்கு கட்டுப்படுவதன் மூலம் ஈமான் அதிகரிக்கும், அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறு செய்வதன் மூலமும் அது குறையும்.

அல்லாஹ் சொல்கிறான்: “விசுவாசம் கொண்டவர்கள் எத்தகையவர்கள் என்றால், அல்லாஹ் என்று அவர்களுக்கு சொல்லப்பட்டால் அவர்களின் உள்ளங்கள் நடுங்கும். அல்லாஹ்வின் வசனங்கள் அவர்களிடம் ஓதிக்காண்பிக்கப்பட்டால் அவர்களின் ஈமான் அதிகரிக்கும், அவர்களின் இரட்சகனில் அவர்கள் தவக்குள் வைத்திருப்பார்கள்.” (08:02)

## 30. அமல்கள் எப்போது அல்லாஹ்வால் ஏற்றுக்கொள்ளப்படும்?

இரண்டு நிபந்தனைகளைக் கொண்டதாக இருந்தால் அல்லாஹ்வால் ஏற்றுக்கொள்ளப்படும்.

1. அல்லாஹ்வுக்காக மாத்திரம் அது செய்யப்படுதல்.

2. நபியவர்களின் வழிகாட்டலுக்கு ஏற்றவாறு இருத்தல்.

### 31. அல்லாஹ்வின் மீது தவக்குல் வைத்தல் என்றால் என்ன?

தீமைகளைத் தடுப்பதிலும் நன்மைகளைப் பெற்றுக்கொள்வதிலும் பௌதீக ரீதியான காரண காரியங்களை நிறைவேற்றிவிட்டு இறுதி முடிவுக்காக அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்திருத்தல், அவனிடம் எதிரர்பார்த்திருப்பது.

### 32. மிகப்பெரும் பாவம் எது?

அல்லாஹ்வுக்கு இணைவைத்தல்.

‘‘நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைக்கப்படுவதை மன்னிக்கமாட்டான் அது அல்லாதவற்றை தான் நாடியவர்களுக்கு மன்னிப்பான், யார் அல்லாஹ்வுக்கு இணைவைத்தானோ அவன் மிகப்பெரும் பாவத்தை சம்பாதித்துக்கொண்டான்.’’(04:48)

‘‘எனது சிரிய மகனே நீ இணைவைக்காதே நிச்சயமாக இணைவைப்பு மிகவும் பெரும் அனியாயமாகும்’’ (31:13)

‘‘அல்லாஹ்விடத்தில் மிகப்பெரிய பாவம் எது? என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்க்கப்பட்டது அதற்கு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ் உன்னைப் படைத்திருக்க அவனுக்கு நீ இணைவைப்பதாகும்’’ (முஸ்லிம்)

### 33. ஷிர்க்கையும் அதன் வகைகளையும் குறிப்பிடுக?

(ஷிர்க்) இணைவைத்தல் என்பது: இபாதத்தின் வகைகளில் ஒன்றை அல்லாஹ் அல்லாதவருக்கு செய்தல்.

இணைவைப்பின் வகைகள்:

1. பெரிய இணைவைப்பு: ஒரு வணக்கத்தை ஆரம்பத்திலிருந்தே அல்லாஹ் அல்லாதவருக்காக செய்தல். அல்லது செய்ய முடியும் என நம்புதல், சொல்லுதல். அல்லாஹ் அல்லாதவரிடம் பிரார்த்தித்தல், அல்லாஹ் அல்லாதவருக்கு ஸுஜூது செய்தல், அல்லாஹ் அல்லாதவருக்காக அறுத்தல் போன்றவை.

2. சிறிய இணைவைப்பு: முகஸ்துதி ஒரு வணக்கத்தை அல்லாஹ்வுக்காக செய்து அதில் அடுத்தவருக்கு பங்கு கொடுத்தல். உதாரணமாக, மனிதர்கள் பார்ப்பதற்காக தொழுகையை அழகுபடுத்துதல்.

## 34. ஷிர்க்கின் (இணைவைப்பின்) விபரீதங்கள் யாவை?

1. பெரும் பாவங்களில் மிகவும் பெரியதாகும்.
2. மிகப் பெரும் வழிகேடாகும்.
3. அது இறைவனுக்குச் செய்யும் மிகப் பெரும் அநியாயமாகும்.
4. இஸ்லாத்தை நிராகரித்தவராவார்.
5. தௌபாச் செய்யாமல் அல்லாஹ் அதை மன்னிக்கமாட்டான்..
6. வாழ்க்கையில் பரகத் நிம்மதி இருக்காது. பயம் தொற்றிக் கொள்ளும்.
7. அமல்கள் அழிந்துபோகும்.
8. நரகமே நிரந்தரமான தங்குமிடம்.
9. மறுமையில் எந்த உதவியாளர்களும் இருக்கமாட்டார்கள்.
10. நபியவர்களின் விசேடமான சிபார்சுகள் எதுவும் கிடைக்காது.

## 35. இணைவைப்பு முஸ்லிம்களிடம் இருக்கிறதா?

ஆம், பல இணைவைப்புக்கள் முஸ்லிம்களுக்கு மத்தியில் உள்ளது.

“அவர்களில் அதிகமானவர்கள் அல்லாஹ்விற்கு இணைவைத்த நிலையிலேயே அல்லாஹ்வை நம்பியுள்ளனர்.” (12:106)

“எனது சமுதாயத்திலிருந்து பல குழுக்கள் முஷ்ரிகுகளுடன் இணைந்து சிலைகளை வணங்காதவரை மறுமைநாள் ஏற்படாது.” (திர்மிதி)

அல்லாஹ் அல்லாத அவ்லியாக்கள், மரணித்தவர்களிடம் பிரார்த்தித்தல், அருத்துப்பலியிடல், பாதுகாப்புத் தேடுதல், கப்றுகளிடம் வணக்கங்களில் ஈடுபடுதல் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

**36. சூனியம் செய்வதன் சட்டம் என்ன?**

சூனியம் செய்வது நிராகரப்பாகும்.

“என்றாலும் ஷைத்தான்கள் நிராகரித்தார்கள் மனிதர்களுக்கு சூனியத்தைக் கற்றுக்கொடுத்தார்கள்.” (02:102)

“அழித்துவிடக்கூடிய ஏழு பாவங்களைத் தவிர்ந்துகொள்ளுங்கள், அல்லாஹ்விற்கு இணைவைப்பது, சூனியம்,….” (முஸ்லிம்)

**37. குறி சாஸ்திரம் செல்பவர்களிடம் செல்ல முடியுமா? மேலும் அவர்கள் சொல்வதை உண்மைப்படுத்த முடியுமா?**

அவர்களிடம் செல்வது கூடாது மற்றும் அவர்கள் அறிவிக்கும் மறைவான விடயங்களை உண்மைப்படுத்தவும் கூடாது.

“நபியே! நீர் கூறுவீராக வானம் பூமியில் உள்ள மறைவானவற்றை அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறியமாடடார்.” (27:65)

“யார் குறி சாஸ்திரம் பார்ப்பவனிடம் சென்று அவன் சொல்வதை உண்மைப்படுத்துகிறானோ அவன் முஹம்மது (ஸல்) அவர்கள் மீது இறக்கிவைக்கப்பட்டதை நிராகரித்துவிட்டான்.” (அஹ்மத்)

### 38. மறைவான விடயங்களை அல்லாஹ்வைத் தவிர வேறு எவறாவது அறிவாரா?

அல்லாஹ்வைத் தவிர வேறு எவறும் மறைவானவற்றை அறியமாட்டார்.

“நபியே! நீர் சொல்வீராக, வானங்களிலும் பூமியிலும் உள்ள மறைவான விடயங்களை அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறியமாட்டார், அவர்கள் எப்போது எழுப்பப்படுவார்கள் என்பதையும் உணரமாட்டார்கள்.” (23:65)

“அல்லாஹ்வைத் தவிர மறைவானவற்றை எவறும் அறியமாட்டார்.” (தபரானி)

### 39. அல்லாஹ் அல்லாதவரைக்கொண்டு சத்தியம் செய்ய முடியுமா?

அல்லாஹ் அல்லாதவரைக்கொண்டு சத்தியம் செய்ய முடியாது ஏனெனில் அது இணைவைப்பாகும்.

“நபியே! நீர் சொல்வீராக: ஆம் எனது இரட்ச்சகன் மீது ஆணையாக நிச்சயமாக நீங்கள் எழுப்பப்படுவீர்கள்.” (64:7)

“யாராவது சத்தியம் செய்பவராக இருந்தால் அவர் அல்லாஹ்வைக்கொண்டு சத்தியம் செய்யட்டும் இல்லையென்றால் வாய்மூடியிருக்கட்டும்.” (புஹாரி)

### 40. மந்திரிக்கப்பட்ட நூல் தாயத்து போன்றவற்றை அணிய முடியுமா?

அதை அணிய முடியாது ஏனெனில் அது இணைவைப்பாகும்.

“அல்லாஹ் உனக்கு ஒரு தீங்கை ஏற்படுத்தினால் அவனைத் தவிர வேறு எவராலும் அதை இல்லாமலாக்க முடியாது.” (06:17)

“யார் தாயத்தை அணிந்தானோ அவன் அல்லாஹ்வுக்கு இணைவைத்து விட்டான்.” (அஹ்மத்)

## 41. “அன்ன முஹம்மதன் ரஸுலுல்லாஹ்” என்ற ஷஹாதாவின் கருத்து என்ன?

நிச்சயமாக அல்லாஹ் அவரை உலகத்தாருக்கு நன்மாராயம் சொல்பவராக அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும் தூதராக அனுப்பினான்.

அவர் ஏவியவற்றை எடுத்து நடப்பதும், அவர் அறிவித்தவற்றை உண்மைப்படுத்துவதும் கடமையாகும், அவர் விலக்கியவற்றை முற்றாக தவிர்த்தல் வேண்டும். அவர் கற்றுத் தந்த முறைப்படியே அல்லாஹ்வை வணங்க வேண்டும்.

‘‘யார் தூதருக்கு கட்டுப்பட்டானோ திண்ணமாக அவன் அல்லாஹ்விற்கு கட்டுப்பட்டவனாவான்.’’ (04:80), “அவர் தன் மனோ இச்சைப்படி எதையும் சொல்வதில்லை, அவருக்கு வஹியாக அறிவிக்கப்பட்டவற்றையே சொல்கின்றார்.’’ (53:3,4)

‘‘அல்லாஹ்வையும் மறுமை நாளையும் ஆதரவு வைத்து அல்லாஹ்வை அதிகம் திக்ரு செய்கிறாரோ திண்ணமாக அவருக்கு அல்லாஹ்வின் தூதரிலே அழகிய முன்மாதிரி உள்ளது.’’ (33:21)

## 42. நபி (ஸல்) அவர்கள் பற்றி சுருக்கமாக அறிமுகம் செய்க.

நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் கி.பி. 571ஆம் ஆண்டு மக்காவில் பிறந்தார்கள், அவரது தந்தையின் பெயர் அப்துல்லாஹ், தாயின் பெயர் ஆமினா. பிறப்பதற்கு முன்னரே அவரது தந்தை இறந்துவிட்டார், பிறந்து ஆறு வயதில் தாயும் இறந்தார் பாட்டனார் அப்துல் முத்தலிபிடமும் பின்பு அவரது சிறிய தந்தை ஆபூதாலிபிடமும் வழர்ந்தார்கள். 25ந்தாம் வயதில் அன்னை ஹதீஜா (ரழி) அவர்களை திருமணம் செய்தார். 40ஆம் வயதில் ஹிராக் குகையில் வைத்து வஹி (இறைச் செய்தி) இறங்கியது. 53ஆம் வயதில் மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்தார்கள். தனது 63ஆம் வயதில்

மதீனாவில் வபாத்தானார், அன்னை ஆயிஷா (ரழி) அவர்களின் வீட்டில் அடக்கம் செய்யப்பட்டார்கள். முஹம்மத் (ஸல்) அவர்கள் ரஸுல்மார்கள், நபிமார்களில் இறுதியானவராவார்.

## 43. முஹம்மத் (ஸல்) அவர்கள் எதிலிருந்து படைக்கப்பட்டார்கள்.?

முஹம்மத் (ஸல்) அவர்களை ஏனைய மனிதர்களைப் போன்று அல்லாஹ் ஓர் ஆணிலிருந்தும் பெண்ணிலிருந்துமே படைத்தான்.

“அவன்தான் உங்களை மண்ணிலிருந்தும் பின்பு இந்தியத்திலிருந்தும் படைத்தான்.’’ (40:67)

“நிச்சயமாக உங்கள் ஒருவரின் படைகோளம் உங்கள் தாயின் வயிற்றில் நாற்பது நாள்கள் இந்திரியமாக ஒன்றுசேர்க்கப்படுகிறது.’’ (புஹாரி, முஸ்லிம்)

## 44. நபி (ஸல்) அவர்களைப் புகழ்வதில் எல்லை மீறுவதன் சட்டம் என்ன?

நபி (ஸல்) அவர்களைப் புகழ்வதில் எல்லை மீறுதல் கூடாது. “நபியே! நீர் சொல்வீராக. நிச்சயமாக நான் உங்களைப்போன்ற ஒரு மனிதன்தான். நிச்சயமாக உங்களது கடவுல் ஒருவன்தான் என்று எனக்கு இறைவனிடமிருந்து வஹி அறிவிக்கப்படுகின்றது.’’ (18:110)

“மர்யமின் மகனை கிறிஸ்தவர்கள் எல்லை மீறிப்புகழ்ந்ததைப்போல என்னையும் நீங்கள் எல்லை மீறிப்புகழ்ந்து விடாதீர்கள் நிச்சமாக நான் ஒரு அடிமையாவேன். எனவே, அல்லாஹ்வின் அடியான் அவனது துதர் என்று நீங்கள் கூறுங்கள்.’’ (புஹாரி)

## 45. அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நாம் எப்படி நேசிக்க வேண்டும்.?

அவர்களுக்கு கட்டுப்படுதல், அவர்களது ஏவல்களைப் பின்பற்றி வாழ்வதன் மூலமே நேசிக்க வேண்டும். அதுவே அவர்களை நாம் உண்மையாக நேசிப்பதற்கான அடையாளமாகும்.

“நபியே! நீர் சொல்வீராக நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப்பின்பற்றுங்கள் அல்லாஹ் உங்களை நேசிப்பான்.” (03:31)

“உங்களில் ஒருவருக்கு தனது பெற்றோரை விட, தனது பிள்ளையை விட, ஏனைய எல்லா மனிதர்களையும் விட நான் விருப்பத்திற்குறியவனாக ஆகும் வரை அவர் ஈமான் கொண்டவராக ஆக மாட்டார்.” (புஹாரி)

## 46. நபி (ஸல்) அவர்கள் நம்மை அல்லாஹ்வுடன் எவ்வகையில் தொடர்புபடுத்துகிறார்கள்.?

இறைவனிடமிருந்து வரும் செய்திகளை எமக்கு எற்றிவைத்துள்ளார்கள்.

“ரஸூலே உமக்கு இறைவனிடமிருந்து இறக்கிவைக்கப்பட்டவற்றை எற்றிவைப்பாயாக.” (05:67)

நபியவர்கள் தனது இறுதி ஹஜ்ஜின்போது கூடியிருந்த ஸஹாபாக்களைப்பார்த்து நான் இறைவனிடமிருந்து வந்தவற்றை உங்களுக்கு எற்றிவைத்தேனா? என்று கேட்டார்கள். அப்போது ஸஹபாக்கள்: நிச்சயமாக நீங்கள் எற்றிவைத்தீர்கள், உங்களது பொறுப்பை நிறைவேற்றினீர்கள், உபதேசம் செய்தீர்கள் என்று சார்ட்சி சொல்கின்றோம் என்று கூறினார்கள். நபியவர்கள் “இறவைா! இதற்கு நீயே சாட்சி என்று கூறினார்கள்.” (முஸ்லிம்)

## 47. நபி (ஸல்) அவர்களின் சிபாரிசு யாருக்கு கிடைக்கும் அதனை யாரிடம் கேட்க்க வேண்டும்?

அல்லாஹ்வுக்கு இணைவைக்காமல் மரணித்த ஒவ்வொரு இறைவிசுவாசிக்கும் மறுமையில் நபியவர்களின் சிபாரிசு கிடைக்கும்.

நபி (ஸல்) அவர்களின் ஷபாஅத்தை (சிபாரிசை) அல்லாஹ்விடமே கேட்க்கவேண்டும்.

“நபியே நீர் சொல்வீராக அனைத்து ஷபாஅத்துக்களும் அல்லாஹ்விற்கே உரியது.” (39:44)

“இறைவா! நபியவர்களை என் விடயத்தில் ஷபாஅத்துச் செய்ய வைப்பாயாக.” (திர்மிதி)

## 48. முதலாவதாக படைக்கப்பட்டவர் யார்?

மனிதர்களில் ஆதம் (அலை) அவர்கள், பொருட்களில் பேனை.

“நிச்சயமாக நான் பிசைந்த கழிமண்ணிலிருந்து மனிதனைப் படைக்கப்போகின்றேன் என்று உமது இரட்சகன் வானவர்களிடம் சொன்னதை ஞாபகப்படுத்திப்பார்ப்பீராக.” (38:71)

“நிச்சயமாக அல்லாஹ் முதலில் படைத்தது பேனையாகும்.” (அபூதாவுத், திர்மிதி)

## 49. அல்குர்ஆன் என்றால் என்ன?

அது அல்லாஹ்வின் பேச்சாகும், ஜிப்ரீல் (அலை) அவர்களின் ஊடாக 23 வருடங்களில் அல்லாஹ் தேவைக்கு ஏற்ப நபியவர்களுக்கு இறக்கி வைத்தான். ஒவ்வொரு வசனத்தையும் அத்தியாயங்களையும் அவனே ஒழுங்குபடுத்தினான்.

“இணைவைப்பாளர்களில் ஒருவர் உன்னிடம் அடைக்களம் தேடினால் அவர் அல்லாஹ்வின் பேச்சைக் கேட்க்கும் வரை அவருக்கு அடைக்களம் கொடுப்பீராக.” (09:06)

## 49. அல்லாஹ் எதற்காக அல்-குர்ஆனை இறக்கினான்?

அல்லாஹ் அல்-குர்ஆனில் சொல்லப்பட்டவற்றை நடைமுறைப் படுத்துவதற்கும் அதை ஓதுவதற்கும் சிந்திப்பதற்கும் இறக்கிவைத்துள்ளான்.

“உங்களுடைய இரட்சகனிடமிருந்து உங்களுக்கு எது இறக்கிவைக்கப்பட்டதோ அதைப் பின்பற்றுங்கள். அவனை விட்டுவிட்டு அவ்லியாக்களைப் பின்பற்றாதீர்கள்.” (07:03)

“அல்குர்ஆனை ஓதுங்கள், அதை நடைமுறைப்படுத்துங்கள், அதைப்பின்பற்றாமல் இருக்காதீர்கள் மேலும் அதில் எல்லை மீறிவிடாதீர்கள், அதைக்கொண்டு சாப்பிடாதீர்கள், மேலும் அதைக்கொண்டு உழைக்காதீர்கள்.” (அஹ்மத்)

## 51. அல்-குர்ஆன் எவ்வாறு பாதுகாக்கப்பட்டுள்ளது?

அல்குர்ஆனை பாதுகாக்கும் பொறுப்பை அல்லாஹ் ஏற்றுக்கொண்டுள்ளான். உலகம் அழியும் வரை வருபவர்களுக்கான பொதுமறையாக அதை அல்லாஹ் ஆக்கியுள்ளான் அதனால் அதுவரை அதைப் பாதுகாக்கும் பொறுப்பையும் அவனே ஏற்றுக்கொண்டான். அது உள்ளங்களிலும் நடத்தைகளிலும் நூல்களிலும் காலத்திற்கு காலம் மாறுபடும் பாதுகாப்பு முறைகளிலும் எவருக்கும் சந்தேகம் ஏற்படாத அடிப்படையில் பாதுகாக்கப்பட்டுள்ளது. அல்குர்ஆன் பாதுகாக்கப்படவில்லை அல்லது அதில் கூட்டல் குறைத்தல் நடந்துள்ளது என்று எவராவது நம்பினால் அவன் இஸ்லாத்தை நிராகரித்தவனாவான்.

## 52. குர்ஆனை மாத்திரம் எடுத்து ஹதீஸை நிராகரிக்க முடியுமா?

குர்ஆனை மாத்திரம் எடுத்துக்கொண்டு ஹதீஸை நிராகரிக்க முடியாது.

“மனிதர்களுக்கு இறக்கிவைக்கப்பட்டதை அவர்களுக்கு நீங்கள் தெளிவுபடுத்த வேண்டும் என்பதற்காக உமக்கு நாம் இந்த உபதேசத்தை இறக்கிவைத்துள்ளோம்.” (16:44)

“அறிந்துகொள்ளுங்கள்: நிச்சயமாக நான் குர்ஆனும் அது போன்ற ஒன்றும் கொடுக்கப்பட்டுள்ளேன்.” (அஹ்மத்)

## 53. அல்லாஹ்வையும் அவனது தூதரையும் பின்பற்றுவது எப்படி?

அல்லாஹ்வினதும் அவனது தூதரினதும் கூற்றுக்கு முன்னால், கட்டளைக்கு முன்னால் வேறு எவருடைய கூற்றையோ கட்டளையையோ முற்படுத்தக் கூடாது. அவர்களின் தீர்ப்பில் எந்த சங்கடத்தையும் பெற்றுக்கொள்ளாது முழுக்க முழுக்க அதற்கு அடிபணிதல் வேண்டும்.

‘‘விசுவாசம் கொண்டவர்களே அல்லாஹ்விற்கும் அவனது தூதருக்கும் இடையில் யாரையும் முற்படுத்தாதீர்கள்.’’ (49:01)

“அல்லாஹ்விற்கு மாறு செய்யும் வகையில் மற்ற எவருக்கும் கட்டுப்பட முடியாது, நிச்சயமாக (அடுத்தவர்களுக்கு) கட்டுப்படுதல் என்பது நன்மையான விடயங்களில் மாத்திரமே.’’ (அபூதாவுத்)

## 54. நாம் கருத்து முரண்பட்டால் என்ன செய்ய வேண்டும்.?

கருத்து முரண்பாடுகளின்போது அல்குர்ஆன், அஸ்ஸுன்னாவின் தீர்ப்பைப் பார்க்க வேண்டும்.

“நீங்கள் ஒரு விடயத்தில் பிரச்சினைப்பட்டுக் கொண்டால் அல்லாஹ் வின்பாலும் அவனுடைய தூதரின் பாலும் மீட்டுங்கள்.’’ (04:59)

## 55. ஹதீஸ் அல்லது ஸுன்னா என்றால் என்ன?

நபி (ஸல்) அவர்களின் சொல், செயல், அங்கீகாரம், குணவியல்புகள் எனும் அனைத்துமாகும்.

## 56 ஹதீஸ் அல்லது ஸுன்னா எவ்வாறு பாதுகாக்கப்பட்டுள்ளது?

ஹதீஸ்கள் அல்லது ஸுன்னாக்கள் ஸஹாபாக்களினால் பாடமிடப்பட்டதோடு எழுதத் தெரிந்தவர்களினால் எழுதப்பட்டும் பாதுகாக்கப்பட்டது பின்பு அவர்கள் அதை அடுத்தவர்களுக்கு எற்றி வைக்க பின்னால் வந்தவர்கள் தங்களின் நூல்களில் அறிவிப்பாலர்

வரிசைகளுடன் பதிந்து வைத்தனர். பின்னர் ஹதீஸ்களைத் தரம் பிரிப்பதற்கான தனியான கலைகள் தோற்றம் பெற்றதோடு ஹதீஸ் அறிவிப்பாளர்களின் தர விமர்சனக் கலைகளும் தோற்றம் பெற்று நம்பகமான உண்மையில் நபி (ஸல்) அவர்கள் சொன்ன ஹதீஸ்களை மாத்திரம் அறிந்துகொள்வதற்கான முறைகள் எழுத்துரப்பெற்றன. இவ்வாறு அல்லாஹ்வால் இன்றளவும் மனிதர்களால் பின்பற்றக் கூடிய அடிப்படையில் பாதுகாக்கப்பட்டுள்ளன.

## 57. ஸஹாபாக்கள் என்றால் யார்? அவர்கள் விடயத்தில் ஒரு முஸ்லிமின் கொள்கை என்ன?

இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட நிலையில் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து முஸ்லிமாக மரணித்த ஒவ்வொருவரும் ஸஹாபியாவார். அவர்கள் அல்லாஹ்வால் பொருந்திக்கொள்ளப்பட்ட கூட்டமாகும். இஸ்லாமிய சமூகத்தில் மிகச்சிறந்தவர்களாகும், இஸ்லாத்தை கற்பதிலும், பின்பற்றுவதிலும், அடுத்தவர்களுக்கு அதை எற்றி வைப்பதிலும் அடுத்தவர்களை விடவும் அதிகம் தியாகம் செய்துள்ளனர். அவர்கள் பாவங்களிலிருந்து பாதுகாக்கப்பட்டவர்கள் அல்ல அவர்களிடமிருந்து பாவங்கள் ஏற்பட்டாலும் அவற்றை அல்லாஹ் மன்னிக்கும் அளவு அதிக நன்மைகளைச் செய்துள்ளனர். அவர்களை நேசிப்பதும் அவர்களின் வரலாற்றைப் படிப்பதும் அவர்களை முன்மாதிரிகளாகக் கொள்வதும் நமது கடமையாகும்.. அவர்களில் எவரையேனும் கோபிப்பதும் வெறுப்பதும் நயவஞ்சகத்தின் நிபாக்கின் அடையாளமாகும்.

## 58. உம்மஹாதுல் மு.ஃ.மினீன் (மு.ஃ.மீன்களின் தாய்மார்) என்போர் யார்?

அவர்கள் நபி (ஸல்) அவர்களின் மனைவியராகும்.

அல்லாஹ் சொல்கிறான்: “மு.ஃ.மின்களுக்கு தங்களின் ஆண்மாக்களை விடவும் நபியவர்களே மிகவும் நேசத்திற்குரியவராகும் அவர்களின்

மனைவியர் (மு.ீ.மின்களாகிய) அவர்களின் அன்னையராகும்.'' (33:06)

## 59. நபியவர்களின் குடும்பத்தினர் விடயத்தில் எங்களுக்குள்ள கடமை என்ன?

அவர்களை நாம் நேசிக்க வேண்டும், அவர்களை கோபிப்பவர்களை நிராகரிக்க வேண்டும், அவர்கள் விடயத்தில் எல்லை மீறுதல் கூடாது. நபியவர்ளின் குடும்பம் என்பது. அவரது மனைவியர், அவரது சந்ததி, ஹாஷிம் கிளையாரிலும், முத்தலிப் கிளையாரிலும் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட மு.ீ.மின்கள் அனைவருமாகும்.

## 60. பித்அத் என்றால் என்ன? அதை நாம் ஏற்க்க முடியுமா?

நபி (ஸல்) அவர்கள், அவரது ஸஹாபாக்களின் காலத்தில் இல்லாத மார்க்கத்தில் புதிதாக உருவாக்கப்பட்ட ஒவ்வொன்றுமாகும். அதை ஏற்க முடியாது, நிராகரிக்க வேண்டும்.

''மார்க்கத்தில் புதிதாக உருவாக்கப்பட்ட ஒவ்வொன்றும் வழிகேடுகளாகும்.'' (அபூதாவுத்)

## 61. பித்அத்தின் விபரீதங்கள் யாவை?

1. குறித்த அமல் ஏற்றுக்கொள்ளப்படாது.
2. நேர விரயம்.
3. மார்க்கத்தில் குறை இருக்கிறது என்று சொல்வதாகும்.
4. மார்க்கம் பூரணப்படுத்தப்படவில்லை என்பதாக அமையும்.
5. ஸுன்னத்துக்கள் மக்களை விட்டும் மறைந்துவிடும் தூரமாகிவிடும்.
6. மார்க்கத்தில் குழப்பத்தை ஏற்படுத்துவதாகும்.
7. பித்அத்துக்கள் செய்பவர்கள் அதை மார்க்கம் என்று நினைப்பதனால் தௌபாச் செய்வதில்லை.

8. அல்லாஹ்வின் தண்டனைக்கு வழிவகுக்கும்.
9. ஹவ்ழுல் கவ்ஸரில் நீர் அருந்தும் வாய்ப்பு கிடைக்காது.
10. முஸ்லிம்களுக்கு மத்தியில் பிளவுகளை உருவாக்கும்.
11. வழிகேட்டை அதிகரிக்கும்.

### 62. மார்க்கத்தில் நல்ல பித்அத்கள் உள்ளதா?

மார்க்கத்தில் நல்ல பித்அத்கள் இல்லை.

“இன்றைய தினம் உங்களுடைய மார்க்கத்தை உங்களுக்காக நான் முழுமைப்படுத்திவிட்டேன். எனது அருள்களையும் உங்களுக்காக பூரனமாக்கிவிட்டேன்.” (05:03)

“புதிதாக உருவாக்கப்படும் விடயங்களை உங்களுக்கு நான் எச்சரிக்கிறேன். புதிதாக உருவாக்கப்படும் ஒவ்வொரு விடயங்களும் பித்அத்தாகும். ஒவ்வொரு பித்அத்தும் வழிகேடாகும்.” (அபூதாவுத்)

### 63. இஸ்லாம் என்றால் என்ன? இஸ்லாம் அல்லாதவற்றை அல்லாஹ் மார்க்கமாக ஏற்பானா?

இஸ்லாம் என்றால் அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு முழுமையாக அடிபனிவதைக் குறிக்கின்றது. இஸ்லாத்தைத் தவிர வேறு எந்த மார்க்கத்தையும் அல்லாஹ் ஏற்கமாட்டான்.

“யார் இஸ்லாத்தை விட்டு வேறு மார்க்கத்தைத் தேடுகின்றானோ அவனிடமிருந்து அது ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது, மேலும் அவன் மறுமையில் நஷ்டவாளர்களில் உள்ளவனாக ஆகிவிடுவான்.”(03: 85)

### 64. கலிமாவை முறிக்கும் காரியங்கள் எவை?

1. அல்லாஹ்வுக்கு இணை வைத்தல்.
2. அல்லாஹுவுக்கும் மனிதர்களுக்கும் இடையில் தரகர்களை ஏற்படுத்துதல்.

3. இணைவைப்பாளர்கள் நிராகரித்துவிட்டனர் என்பதில் சந்தேகம் கொள்ளல் அவர்கள் காபிர் இல்லை என்று நம்புதல் அல்லது சொல்லுதல்.
4. நபி (ஸல்) அவர்களின் வழிகாட்டலை விடவும் அடுத்தவர்களின் வழிகாட்டல் முழுமையானது நல்லது என்று நம்புதல், அதன்படி தீர்ப்பளித்தல்.
5. நபி (ஸல்) அவர்கள் கொண்டு வந்தவற்றில் ஏதாவது ஒன்றை வெறுத்தல் அல்லது நிராகரித்தல்.
6. சூனியம்.
7. முஸ்லிம்களுக்கு எதிராக முஸ்லிம் அல்லாதவர்களுக்கு உதவுதல், அவர்களுக்கு தோள் கொடுத்தல்.
8. மனிதர்களில் சிலருக்கு நபியவர்களைப் பின்பற்ற வேண்டிய அவசியம் இல்லை அவருடைய ஷரீஅத்திலிருந்து அவர்கள் வெளியேற முடியும் என்று நம்புதல்.
9. மார்க்கத்தைப் புறக்கனித்தல்.
10. அல்லாஹ்வின் மார்க்கத்தில் ஏதாவது ஒரு விடயத்தை பரிகசித்தல்.

## 65. சொல், செயல், நம்பிக்கையின் மூலம் நிராகரிப்பு உருவாகும் அவற்றுக்கு உதாரணம் தருக?

சொல்: அல்லாஹ்வையும் அவனது தூதரையும் விமர்சித்தல்.

செயல்: குர்ஆனை அவமதித்தல், அல்லது அல்லாஹ் அல்லாதவருக்கு ஸுஜூது செய்தல் போன்றவை.

நம்பிக்கை: அல்லாஹ் அல்லாத வணங்குவதற்கு தகுதியான ஒருவர் உள்ளார் என்று நம்புதல், அல்லாஹ்வுடன் வேறு படைப்பாளனும் உள்ளான் என்று நம்புதல், அல்லது படைப்பதில் அடுத்தவர்களும் அவனுக்கு உதவியாக இருக்கிறார்கள் என்று நம்புதல்.

## 66. நயவஞ்சகம் என்றால் என்ன? அதன் வகைகள் யாவை?

1. பெரிய நயவஞ்சகம்: நிராகரிப்பை மறைத்து, ஈமானை வெளிப்படுத்துதல். இவ்வாறு நடந்துகொள்பவர் இஸ்லாமியராகக் கருதப்படமாட்டார் அது இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றிவிடக் கூடிய பெரிய நிராகரிப்பாகும்.
“நிச்சமயாக நயவஞ்சகர்கள் நரகத்தின் அடித்தளத்தில் இருப்பார்கள் அவர்களுக்கு எந்த உதவியாளரையும் பெறமாட்டாய்.” (04:145)

2. சிறிய நயவஞ்சகம்: பொய் சொல்லுதல், வாக்குறுதிக்கு மாறு செய்தல், நம்பிக்கைக்கு மோசடி செய்தல் போன்ற நயவஞ்சகத்தின் அடையாளங்கள் ஒருவரிடம் இருப்பது சிறிய நயவஞ்சகமாகும்.

இந்த விடயங்களில் ஈடுபடுவதனால் மார்க்கத்திலிருந்து வெளியேற்றப்படமாட்டார். ஆனால் அது தீமையாகும் அவ்வாறு செய்பவர் அல்லாஹ்வின் தண்டனைக்கு உட்படுவார்.

நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: “நயவஞ்சகனுக்குரிய அடையாளம் மூன்றாகும்: அவன் பேசினால் பொய் பேசுவான், வாக்களித்தால் மாறு செய்வான், அவன் நம்பப்பட்டால் மோசடி செய்வான்.” (புஹாரி, முஸ்லிம்)

## 67. மு..ஜிஸா என்றால் என்ன?

நபிமார்களின் உண்மைத்தன்மையைத் தெளிவுபடுத்த அல்லாஹ்வினால் தனது நபிமார்களுக்கு வழங்கப்பட்ட பௌதீக விதிகளை மீறி ஆற்றப்பட்ட காரியங்களாகும்.

உதாரணமாக: நபி (ஸல்) அவர்களுக்காக சந்திரனை பிளந்தமை, மூஸா (அலை) அவர்களுக்கு கடலைப் பிளந்தமை, பிர்அவ்னையும் அவனுடைய படையையும் மூழ்கடித்தமை போன்றவை.

## 68. ஈமானின் ருக்குன்கள் எவை?

1. அல்லாஹ்வைக் கொண்டு ஈமான் கொள்ளல்.

2. வானவர்களைக் கொண்டு ஈமான் கொள்ளல்.
3. வேதங்களைக் கொண்டு ஈமான் கொள்ளல்.
4. ரஸூல்மார்களைக் கொண்டு ஈமான் கொள்ளல்.
5. மறுமை நாளைக் கொண்டு ஈமான் கொள்ளல்.
6. நன்மை தீமை அனைத்தும் அவனது நாட்டப்படியே நடக்கிறது என்று ஈமான் கொள்ளல்.

இமாம் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் அறிவிப்புச்செய்துள்ள ஹதீஸு ஜிப்ரீல் என்று பிரபல்யமான ஹதீஸில் வரும் செய்தியே இதன் ஆதாரமாகும்.

அந்த ஹதீஸில் ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம்: “ஈமான் என்றால் என்ன என்று எனக்கு அறிவிப்பாயாக.” என்றார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள்: “அல்லாஹ்வையும், அவனது வானவர்களையும், அவனது வேதங்களையும், அவனது ரஸூல்மார்களையும், மறுமை நாளையும், நன்மை தீமை அனைத்தும் இறைவனின் நாட்டப்படியே நடக்கிறது என்பதையும் நீ நம்புவதாகும்.” என்று கூறினார்கள்.

**69. ஈமானின் ருக்குன்களை விபரிக்குக?**
ஈமானின் ருக்குன்கள் ஆறு அவை பின்வருமாறு...

**அல்லாஹ்வை நம்புதல்:**

நம்மைப் படைத்தவனும் நமக்கு உணவளிப்பவனும் அவனே என்று நம்புவதாகும். மேலும் அவனே அனைத்தினதும் சொந்தக்காரன், படைப்பினங்கள் அனைத்தையும் அவன் மாத்திரமே நிருவகிக்கின்றான்.
அவனே வணங்கப்படுபவன் அவனை அன்றி உண்மையாக வணங்கப்படத் தகுதியானவன் வேறு எவரும் இல்லை.

நிச்சயமாக அவனே மிகப்பெரியவன், முழுமையானவன், ஒவ்வொரு புகழுக்கும் சொந்தக்காரன் அவனே, அவனுக்கு அழகிய பெயர்கள்

உண்டு, உயர்வான பண்புகளும் உண்டு, அவனுக்கு நிகராக எவரும் இல்லை. தூய்மையான அந்த அல்லாஹ்விற்கு எந்தவொன்றும் ஒப்பாகாது என்று நம்புவதாகும்.

**வானவர்களை நம்புதல்:**

அல்லாஹ் ஒளியினால் படைத்த ஒரு படைப்பினமே வானவர்களாகும். அவனை மாத்திரம் வணங்கவும் அவனுக்கு முழுமையாக கட்டுப்படவுமே அவர்களைப் படைத்தான். அவர்களுக்கு சுய தேர்வு இல்லை என்னேரமும் அல்லாஹ்வை வணங்கிக்கொண்டே இருப்பார்கள். அவர்களில் அர்ஷைச் சுமப்பவர்கள், நன்மை தீமைகளை எழுதுபவர்கள், கேள்வி கணக்கு கேட்போர், உயிர்களைக் கைப்பற்றுவோர் என்று தனித்தனி வேலைகளுக்கு பொறுப்பாக்கப்பட்டவர்களும் உள்ளனர்.

நபிமார்களுக்கு அல்லாஹ்வின் வஹியைக் கொண்டுவரும் ஜிப்ரீல் (அலை) அவர்களில் ஒருவராவார்.

**வேதங்களை நம்புதல்:**

அல்லாஹ் தனது தூதர்கள் மீது இறக்கியவையே வேதங்களாகும். அவற்றில்

அல்-குர்ஆன் நபி முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும்

இன்ஜீல் ஈஸா (அலை) அவர்களுக்கும்

ஸபூர் தாவுத் (அலை) அவர்களுக்கும்

தௌராத் மூஸா (அலை) அவர்களுக்கும்

இப்றாஹீம், மூஸாவின் ஸுஹுபுகள் இப்றாஹீம் (அலை), மூஸா (அலை) அவர்கள் மீதும் இறக்கிவைக்கப்பட்டது.

**ரஸூல்மார்களை நம்புதல்:**

அவர்கள் அல்லாஹ்வினால் அவனது அடியார்களுக்கு அனுப்பப்பட்டவர்களாகும். அல்லாஹ்வின் கட்டளைகளை

மனிதர்களுக்கு போதித்தல், நன்மையைக் கொண்டும் சுவர்க்கத்தைக் கொண்டும் நன்மாராயம் கூறுதல், தீமை, நரகத்தை விட்டும் மனிதர்களை எச்சரிப்பதற்காகவே அவர்கள் அனுப்பப் பட்டார்கள். ஒவ்வொரு சமூகத்திலும் இருந்த நல்லவர்கள், அந்த சமூகத்தின் மொழியைப் பேசக்கூடியவர்களே தூதர்களாகத் தேர்வு செய்யப்பட்டார்கள்.

அவர்களில் மிகவும் சிறந்தவர்கள் உலுல் அஸ்ம்களான நூஹ் (அலை), இப்றாஹீம் (அலை) மூஸா (அலை), ஈஸா (அலை), முஹம்மத் (ஸல்) ஆகியோராகும்.

**மறுமையை நம்புதல்:**

மரணத்தின் பின்புள்ள கப்ருடைய வாழ்க்கை, அதில் உள்ளவை, இறுதித் தீர்ப்பு நாளில் மனிதர்கள் அனைவரும் எழுப்பப்படும்போது நடப்பவை, கேள்வி கணக்கு, நரகத்தின் மேலால் போடப்படும் பாலம் போன்ற அந்நாளில் உள்ள அனைத்தையும் உறுதியாக நம்புவதைக் குறிக்கும். அந்நாளில் சுவர்க்கவாசிகளுக்கு அவர்களின் அந்தஸ்துகள் வழங்கப்படும் நரகவாசிகளுக்கு அவர்களுக்குரிய இடங்கள் வழங்கப்பட்டிருக்கும்.

**நன்மை தீமைகள் அனைத்தும் அல்லாஹ்வின் கத்ரின் படியே நடக்கிறது என்று நம்புதல்:**

அல்லாஹ்வின் கத்ர் என்பது: உலகத்தில் நடக்கின்ற ஒவ்வொன்றையும் அல்லாஹ் அறிவான், அவை அனைத்தையும் லவ்ஹுல் மஹ்பூலில் எழுதினான் அவை அனைத்தையும் அவனுடைய நாட்டத்தின்படி படைத்தான் என்று நம்புவதாகும்.

அல்லாஹ் சொல்கிறான்: "நிச்சயமாக நாம் ஒவ்வொன்றையும் கத்ரைக் கொண்டே படைத்தோம்." (54:49)

கத்ர் நான்கு படித்தரங்களைக் கொண்டது:

1. அல்லாஹ்வின் அறிவு: அல்லாஹ் ஒவ்வொன்றையும் பற்றிய முற்கூட்டிய அறிவைப் பெற்றவன். நடப்பதற்கு முன்னரும் அது நடந்தால் எவ்வாறு இருக்கும் என்பது பற்றிய அறிவு அவனுக்கு உள்ளது.

"நிச்சயமாக அல்லாஹ் அவனிடமே மறுமை பற்றிய அறிவு உள்ளது, மழையை அவனே இறக்குகின்றான், கருப்பைகளில் உள்ளதை அவன் அறிவான், நாளை எதை சம்பாதிக்கும் என எந்தவொரு ஆத்மாவும் அறியாது, எந்தவொரு ஆத்மாவும் எந்த நிலத்தில் மரணிக்கும் என்பதை அறியாது, நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவனாகவும் ஞானமிக்கவனாகவும் இருக்கின்றான்." (31:34)

2. எழுதுதல்: நிச்சயமாக அல்லாஹ் அவை அனைத்தையும் லவ்ஹுல் மஹ்பூலில் எழுதினான், நிகழ்ந்த நிகழவிருக்கின்ற ஒவ்வொன்றும் அவனிடம் உள்ள ஏட்டில் எழுதப்பட்டுள்ளது.

"(அல்லாஹ்) அவனிடமே மறைவான விடயங்களின் திறவுகோள்கள் உள்ளன, அவனைத் தவிர வேறு எவரும் அதை அறியமாட்டார்கள், தரையில் உள்ளவற்றையும் கடலில் உள்ளவற்றையும் அவன் அறிவான், அவன் அறியாமல் ஒரு இலையும் உதிர்வதில்லை, பூமியின் இருள்களில் உள்ள வித்தும் ஈரமானவை, காய்ந்தவை அனைத்தும் அவனுடைய தெளிவான ஏட்டில் இல்லாமல் இல்லை." (04:59)

3. நாட்டம்: அல்லாஹ்வின் நாட்டத்தின்படியே ஒவ்வொன்றும் நடக்கின்றது. எது நடந்தாலும் அது அவனுடைய நாட்டத்தின்படியே நடக்கிறது.

"யார் உங்களில் நேர்த்தியாக இருக்க விரும்புகிறாரோ அவருக்கு, உலகத்தாரின் இரட்சகனான அல்லாஹ் நாடினாலே அன்றி அவர்கள் நாடமாட்டார்கள்." (81:28,29)

4. படைத்தல்: உருவாக்கப்பட்டிருக்கும் அனைத்துப் படைப்பினங்களும் (செயல்களும்) அல்லாஹ்வால் படைக்கப்பட்டவை என்று நம்புதல், அதன் உடல் அமைப்பையும் அதன் பண்புகளையும் அதன் இயக்கங்கள் அதில் உள்ள ஒவ்வொன்றையும் அவனே படைத்தான் என்று நம்புதல்.

''அல்லாஹ்தான் உங்களையும் நீங்கள் செய்பவற்றையும் படைத்தான்.'' (37:96)

## 70. வலியுல்லாஹ் (அவ்லியாக்கள்) என்போர் யார்?

வலியுல்லாஹ் (அவ்லியா) என்பது இறையச்சமுள்ள ஒவ்வொரு மு∴மினையும் குறிக்கும்.

''அறிந்துகொள்ளுங்கள் நிச்சயமாக அல்லாஹ்வின் நேசர்கள் அவர்களுக்கு எந்தப் பயமும் இல்லை அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள். அவர்கள் எத்தகையவர்கள் என்றால், விசுவாசம் கொண்டார்கள் மேலும் இறைவனை அஞ்சுபவர்களாகவும் இருந்தார்கள்.'' (10:62, 63)

நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: ''நிச்சயமாக எனது நேசர்கள் அல்லாஹ்வும் மு∴மின்களில் நல்லவர்களுமாகும்.'' (புஹாரி, முஸ்லிம்)

## 71. அல்வலா∴, வல்பரா∴ என்றால் என்ன?

அல்வலா∴ என்றால்: மு∴மின்களை அவர்களின் ஈமானுக்காக நேசிப்பதும் அவர்களுக்கு உதவுவதுமாகும்.

அல்லாஹ் சொல்கிறான்: ''மு∴மினான ஆண்களும் மு∴மினான பெண்களும் அவர்களில் சிலர் சிலரின் (மீது வலா∴ கொண்டவர்களாகும்) நேசம் கொண்டவர்கலாகும்....'' (09:71)

அல்பரா.ஃ. என்றால்: நிராகரிப்பாளர்களை அவர்கள் இஸ்லாத்தை நிராகரித்தார்கள் என்பதற்காக அவர்களை விட்டும் நீங்குவதும் மு.ஃ.மின்களுக்கு எதிராக அவர்களுக்கு உதவாமல் இருப்பதுமாகும். ஆனாலும் மனிதன் என்ற அடிப்படையில் அவர்களுக்கு உதவுவதற்கு இஸ்லாத்தில் தடையில்லை.

‘‘நிச்சயமாக இப்றாஹீமிலும் அவருடன் இருந்தவர்களிலும் உங்களுக்கு அழகிய முன்மாதிரி உண்டு. அவர்கள் தங்கள் கூட்டத்தினருக்கு: நிச்சயமாக நாங்கள் உங்களிலிருந்தும் நீங்கள் அல்லாஹ்வை விட்டு விட்டு வணங்குபவற்றை விட்டும் நீங்கியவர்களாவோம். உங்களை நாங்கள் நிராகரித்தோம், உங்களுக்கும் எங்களுக்கும் இடையில் விரோதமும் கோபமும் நீங்கள் அல்லாஹ்வை மாத்திரம் ஈமான் கொள்ளும் வரை தோன்றிவிட்டது. என்று கூறினார்கள்.’’ (60:4)

## 72. மு.ஃ.மீன்களை நேசித்தல் என்றால் என்ன?

அல்லாஹ்வுக்கு மாத்திரம் வணக்கங்களைச் செலுத்தும் முவஹ்ஹித்களான இறைவிசுவாசிகளை நேசிப்பதும் அவர்களுக்கு உதவி செய்வதுமாகும். நல்ல விடயங்களில் அவர்களுக்கு ஒத்துழைப்பு வழங்குதல், தீய விடயங்களை விட்டும் அவர்களைத் தடுத்தல்.

‘‘மு.ஃ.மினான ஆண்களும், மு.ஃ.மினான பெண்களும் அவர்களில் சிலர் சிலருக்கு தோழர்களாக இருக்கிறார்கள்.’’ (09:71)

‘‘ஒரு மு.ஃ.மின் மற்ற மு.ஃ.மினுக்கு ஒரு கட்டிடத்தைப்போன்றவன் அதில் சிலது மற்றயவற்றுடன் இணைந்து பலமான பினைப்பாக உள்ளது.’’ (முஸ்லிம்)

73. காபிர்களை நேசிப்பதும் அவர்களுக்கு உதவி செய்வதும்?
இறை நிராகரிப்பாளர்களுடன் உறவு வைத்துக்கொள்வதில் தப்பில்லை என்ற போதிலும் அவர்களை இஸ்லாத்திற்கு எதிராக நேசிப்பதோ, குப்றுக்காக நேசிப்பதோ தடை செய்யப்பட்டதாகும்.

“உங்களில் யார் அவர்களை நேசிக்கிறாரோ நிச்சயமாக அவர் அவர்களிலிருந்தும் உள்ளவரே.” (05:51)

இறை நிராகரிப்பாளர்களாக இருந்த ஒரு கோத்திரத்தாரைப் பார்த்து நபியவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: “நிச்சயமாக இன்னார் எனக்கு நேசர்கள் அல்ல” (புஹாரி, முஸ்லிம்)

74. மு.ஃ.மீன்களின் தங்குமிடம் எது?

சுவர்க்கம்.

அல்லாஹ் சொல்கிறான்: “விசுவாசம் கொண்டு நல்லமல்கள் செய்தவர்களை நிச்சயமாக அல்லாஹ் கீழால் நதிகள் ஓடிக்கொண்டிருக்கும் சுவர்க்கங்களில் நுழைவிப்பான்.” (47:12)

75. நிராகரிப்பாளர்கள் தங்குமிடம் எது?
நரகம்.

அல்லாஹ் சொல்கிறான்: “நரகத்தைப் பயந்துகொள்ளுங்கள் அதன் எரிபொருட்கள் மனிதர்களும் கற்களுமாகும். அது நிராகரிப்பாளர் களுக்காக தயார் செய்யப்பட்டுள்ளது.” (02:24)

76. முஸ்லிம்கள் எதைக்கொண்டு தீர்ப்பு வழங்கவேண்டும்?

அல்குர்ஆனைக்கொண்டும் சுன்னாவைக்கொண்டும் தீர்ப்பு வழங்குவது முஸ்லிம்கள் மீது கடமையாகும்.

“அல்லாஹ் இறக்கிவைத்ததைக்கொண்டு அவர்களுக்கு மத்தியில் நீ தீர்ப்பு வழங்குவாயாக.” (05:49)

“அல்லாஹ்வே தீர்ப்புக்கூறுபவன், அவனுக்கே தீர்ப்புக்கூறும் அதிகாரமும் உள்ளது.” (அபூதாவுத்)

## 77. இஸ்லாத்திற்கு முரணான மனிதர்களால் உருவாக்கப்பட்ட சட்ட யாப்புக்களை நடைமுறைப்படுத்துவதின் சட்டம் என்ன?

அவற்றை நடைமுறைப்படுத்துவது நிராகரிப்பாகும். அதுதான் சரியானது என்று அதை மார்க்கமாக்கி நடைமுறைப்படுத்துவது இஸ்லாத்தை விட்டும் அவரை வெளியேற்றிவிடும்.

“யார் அல்லாஹ் இறக்கியதைக்கொண்டு தீர்ப்பளிக்கவில்லையோ அவர்கள் காபிர்களாவார்கள்.” (05:44)

“அவர்களின் தலைவர்கள் அல்லாஹ்வின் வேதத்தைக்கொண்டு தீர்ப்பு வழங்காமல் அவன் இறக்கிவைத்தவற்றிலிருந்து தேர்வு செய்யாமல் இருந்தால் அவர்களின் பிரச்சினையை அவர்களுக்கு மத்தியில் ஏற்படுத்திவிடுவான்.” (இப்னுமாஜா)

## 78. இஸ்லாத்தின் பிரதான கடமைகள் யாது?

கலிமா, தொழுகை, நோன்பு, ஸகாத், ஹஜ்.

## 79. முஸ்லிம்களின் தலைவர்கள் விடயத்தில் எமக்குள்ள கடமை என்ன?

அவர்கள் விடயத்தில் எங்களுக்குள்ள கடமை: அவர்களை மதிக்க வேண்டும் அவர்கள் சொல்வதைக் கேட்கவேண்டும் அல்லாஹ்வுக்கு மாறு செய்யாத விடயங்களில் அவர்களைப் பின்பற்ற வேண்டும், அவர்களுக்கு எதிராக செயற்படக் கூடாது. மேலும் அவர்களுக்காக பிரார்த்திக்க வேண்டும் ரகசியமான அடிப்படையில் அவர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும், அவர்களின் குறைகளை அம்பளப்படுத்துவதும் பொதுவெளியில் அவர்களை இளிவுபடுத்துவதும் கூடாது.

## 80. உலமாக்கள் விடயத்தில் நமது கடமை என்ன?

அவர்களை நேசிக்க வேண்டும், மார்க்க விடயங்களிலும், புதிதாகத் தோன்றும் விடயங்களில் மார்க்கத் தீர்ப்பைப் பெற்றுக்கொள்வதற்காக அவர்களை நாட வேண்டும், அவர்களின் நல்ல விடயங்களை பரப்புதலும், தவறுகளை மன்னித்தலும் வேண்டும்.

“விசுவாசம் கொண்டு உங்களில் யார் அறிவு கொடுக்கப்பட்டாரோ அவர்களை அல்லாஹ் பல படித்தரங்களால் உயர்த்துகின்றான். நீங்கள் செய்பவை பற்றி அல்லாஹ் நன்கறிந்தவனாவான்.” (58:11)

## 81. நன்மையை ஏவித் தீமையைத் தடுப்பது கடமை என்றால் என்ன?

அல்லாஹ்வுக்கு அவனது தூதருக்கும் வழிப்படும் ஒவ்வொரு விடயத்தினையும் அடுத்தவர்களுக்கு எற்றி வைத்தல், பரப்புதல். அவர்களுக்கு மாறு செய்கின்ற விடயங்கள் ஒவ்வொன்றை விட்டும் தடுத்தல்.

“மனிதர்களுக்காக வெளியேற்றப்பட்டவர்களில் நீங்கள் சிறந்த சமூகமாக இருக்குறீர்கள். நன்மையை ஏவுகின்றீர்கள் தீமையைத் தடுக்கின்றீர்கள்.”

## 82. அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஅத் என்போர் யார்?

சொல், செயல், நம்பிக்கையில் நபி (ஸல்) அவர்களும் ஸஹாபாக்களும் எதில் இருந்தார்களோ அதில் இருப்பவர்களேயாகும். அவர்கள் நபி (ஸல்) அவர்களின் ஸுன்னாவை பின்பற்றி மார்க்கத்தில் புதிதாக தோற்றுவிக்கப்பட்டவைகளை (பித்அத்துக்களை) விடுவதனால் அவர்கள் அஹ்லுஸ்ஸுன்னா என்று அழைக்கப்படுகிறார்கள்.

அவர்கள் அனைவரும் சத்தியத்தில் ஒன்றுபடுவதாலும் அவர்கள் அதில் பிரியாமல் இருப்பதனாலும் அவர்களுக்கு ‘ஜமாஆ’ என்று சொல்லப்படுகின்றது.

## 83. அகீதா என்றால் என்ன?

இஸ்லாத்தின் நம்பிக்கை சார்ந்த விடயங்கள் ஒவ்வொன்றையும் ஒரு முஸ்லிம் உறுதியாக நம்புவதைக் குறிக்கின்றது.

## 84. மன்ஹஜ் என்றால் என்ன?

ஒரு விடயத்தை எவ்வாறு செய்ய வேண்டும் என்ற வழிகாட்டலையே இது குறிக்கின்றது. இஸ்லாத்தின் கடமைகள், ஏவல்கள் தெளிவுபடுத்தப்பட்டுள்ளதைப் போலவே அதை எவ்வாறு செய்ய வேண்டும் என்பதும் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

## 85. தன்னை மாத்திரம் ஒரு மனிதன் சீர்திருத்திக்கொண்டால் போதுமா?

இல்லை. தன்னையும் சீர்படுத்தி தன் குடும்பத்தையும் சீர்படுத்த வேண்டும்.

"விசுவாசம் கொண்டவர்களே உங்களையும் உங்களது குடும்பத்தையும் நரகத்திலிருந்து பாதுகாத்துக்கொள்ளுங்கள்." (66:6)

"ஒவ்வொரு பொருப்பாலனிடமும் அவன் எவ்வாறு அதை நிறைவேற்றினான் என்று அல்லாஹ் கேட்பான்" (திர்மிதி)

## 85. முஸ்லிம்கள் எப்போது வெற்றியடைவார்கள்?

அவர்கள் அல்லாஹ்வின் வேதத்தை நடைமுறைப்படுத்தி நபி (ஸல்) அவர்களின் சுன்னாவைப் பின்பற்றி மார்க்கத்தின் பால் மீண்டால் வெற்றியடைவார்கள்.

"விசுவாசம் கொண்டவர்களே நீங்கள் அல்லாஹ்வுக்கு உதவி செய்தால் அல்லாஹ் உங்களுக்கு உதவி செய்வான் உங்கள் கால் பாதங்களை உருதிப்படுத்துவான்." (47:07)

"எனது சமுதாயத்தில் உதவி செய்யப்படும் ஒரு கூட்டம் இருந்துகொண்டே இருக்கும்." (இப்னுமாஜா)

